"இவ்விழாவில் பங்கெடுத்துக் கொள்வதை நான் ஒரு பெரிய கௌரவமாகக் கொள்கிறேன். ஸ்வாமியின் பல தரப்பட்ட பெருமைகளை நாம் நன்கறிவோம். கடவுள் அடிக்கடி உலகத்தில் தர்மத்தை ஸ்தாபனம் செய்யப் பல மஹா புருஷர்கள் மூலமாய் அவதாரம் செய்கிறார். நமது தேசத்தில் இப்பேர்ப்பட்ட மஹா புருஷர்கள் சிலரே பிறந்திருக்கின்றனர். இன்று நாம் கண் கூடாகக் காணும் அப்பேர்ப்பட்ட பெருமை வாய்ந்த மஹா புருஷர் ஸ்ரீ அண்ணங்கராசாரியர் ஆவர்."

இப்படி ஸ்ரீ திருமல்ராவ் தன் அஞ்சலியை ஸ்வாமிக்கு ஸமர்ப்பித்த பின், ஸ்வாமி, "பாகவதமும், ஆழ்வார்கள் அனுபவித்த கிருஷ்ணனும்" என்ற விஷயத்தைப்பற்றி வெகு விஸ்தாரமாகப் பேசினார். "பகவானின் கலியாணகுணங்களில் ஸௌலப்யந்தான் மிகச் சிறந்தது. இக்குணத்தைப் பரக்கப் பிரகடனம் செய்ததே கிருஷ்ணாவதார மஹிமை. இடதுகை வலதுகை தெரியாத இடையர் வம்சத்தில் கிருஷ்ணன் அவதரித்து அவர்களோடு உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று பாராட்டாமல் கலந்து பரிமாறினான்" என்று கூறி, பாகவதத்தில் மலிந்து கிடக்கும் எண்ணற்ற உதாரணங்களை ஸ்வாமி எடுத்துரைத்தார். பிறகு, ஆழ்வார்களும் கண்ணனின் ஸௌலப்யத்திற்கே ஏற்றம் கொடுத்து அதை வாயாரப்பாடி அனுபவித்திருக்கிறார்கள் என்பதை ஸவிஸ்தாரமாக விளக்கிக் காட்டி கண்ணன் குணாதிசயங்களைப் பற்றிய வேடிக்கையான பல உப கதைகளையும் சொல்லி எல்லோரையும் வயிறு கிழியச் சிரிக்கச்செய்தார். ஸ்வாமி 'இன்னும் 10-நிமிஷத்தில் முடித்துவிடுகிறேன்' என்று சொல்லிய பிறகுகூட ஒரு மணிக்குமேல் மீண்டும் உபந்யாஸம் மணிபோவதே தெரியாமல் நடந்ததென்றால் இந்த ஒரு மணியும் கேட்போருக்கு 10 நிமஷம்போல் அவ்வளவு மனதைக்கவரும்படி ருசிகரமாயிருந்ததென்று சொல்லவும் வேண்டுமோ? ஸ்வாமி, கண்ணனின் ஸௌலப்யத்தைச் சொல்லி அனுபவித்து அனுபவித்து ஆனந்த சாகரத்தில் மூழ்கியிருந்தார். அது கேட்போரையும் ஆனந்த சாகரத்தில் அமிழச்செய்ததென்பதில் ஐயமில்லை. இரவு 11-மணிக்குமேல் ஆகியும், ஐயோ! இவ்வரிய உபந்யாஸம் முடிந்துவிட்டதே; இன்னும் கேட்டுக்கொண்டிருக்க முடியாதா?' என்று யாவருமே ஒரு மனதாகச் சொன்னது இன்னும் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

---

டெல்லி, ஆகஸ்டு 7.

## ஸ்வாமியின் ஸம்ஸ்கிருத சொற்பொழிவு

"ஸ்ரீ அண்ணங்கராசாரியார் நம் ஆசாரியர்களின் ஞானச்சுடரொளி"

### ஸ்ரீ அனந்தசயனம் அய்யங்காரின் புகழுரை.

---

இன்று சாயங்காலம் 6-மணிக்கு, ஸ்வாமி அண்ணங்கராசாரியாருக்கு 'இந்தியன் கல்சரல் அசோஸியேஷன்' என்ற இந்திய பண்புக்கழகத்தின் சார்பில் 'கான்ஸ்டிடியூஷன் க்ளப்'பில் குதூகல வரவேற்பு நடந்தது. ஸ்வாமிகள் இங்கு 'ஸம்ஸ்கிருத ஸாஹித்யத்தில் தென்னிந்தியாவின் பங்கு' என்ற விஷயத்தைப்பற்றி ஸம்ஸ்கிருதத்தில் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். ஸம்ஸ்கிருத ஞானிகள் ப்ரபொஸர்கள், பண்டிதர்கள், மாணவர்கள், ஆபீஸர்கள் ஆகியோர் பலர் கூட்டத்திற்கு வந்திருந்தனர்.

ஹிந்து காலேஜ் ஸமஸ்கிருத ப்ரபொஸர் டாக்டர் சுரேந்திரநாத் சாஸ்திரி இக்கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். ஸ்ரீமான் மதுரை வெங்கடராம கனபாடிகள் ஸ்வாமிக்கு ஸம்ஸ்கிருதத்தில் ஸ்வாகதம் சொல்லும்போது ஸ்வாமியின் ஸம்ஸ்கிருத ஞானத்தை மிகவும் ச்லாகித்துக் கூறி ஸ்வாமி இக்காலத்திய பெரிய ஸம்ஸ்கிருத வித்வான்களில் நிகரற்ற தலைவரென்றும், ஸ்வாமியின் ஸம்ஸ்கிருத உபந்யாஸங்கள் செவிக்குத் தனிப்பட்ட விருந்து என்றும் குறிப்பிட்டார்.

பிறகு ஸ்ரீ அண்ணங்கராசாரியார்ஸ்வாமி ஸம்ஸ்க்ருதஸாஹித்யத்தில் தென்னிந்தியாவின் பங்கு' என்ற விஷயத்தைப்பற்றி வெகு விஸ்தாரமாகப் பெரிய நீர்வீழ்ச்சியைப்போல சபையோர் பிரமிக்கத்தக்க உணர்ச்சி ததும்பும் ஒரு சொற்பொழிவு நடத்தினார். ஸதஸ்ஸில் வீற்றிருந்த அவ்வளவு பண்டிதர்களுடைய முகத்திலும் சந்தோஷக்குறி பிரகாசித்தது. ஸ்வாமி ஆளவந்தார், உடையவர், தேசிகர் முதலிய நம் ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளிலிருந்து பல சுலோகங்களை எடுத்துரைத்து ஸம்ஸ்கிருதத்தின் செழிப்புக்கு தக்ஷிணபாரதத்தில் அவதரித்த நம் பூர்வாசாரியர்களின் உழைப்பை விவரித்தார்.

ப்ரபொஸர் டாக்டர் சுரேந்திரநாத் சாஸ்திரிகள் நிகழ்த்திய தன்னுடைய ஸம்ஸ்கிருத தலைமையுரையில் ஸ்ரீ ஸ்வாமியின் உபந்யாஸ தோரணையையும், வாக்கின் மாதுர்யத்தையும், ஒரு அபசப்தங்கூட இல்லாமல், சிறந்த பிரயோகங்களைப் பொழிந்த சாதுர்யத்தைப்பற்றியும் புகழ்ந்துபேசி, ஸ்வாமி குறிப்பிட்டவழியில் சிறிது விவரித்துப்பேசினர்.

அடுத்தபடியாக ஸ்வாமிக்கும், மற்றவர்களுக்கும் வந்தனோபசாரம் கூறின கழகத்தின் காரியதரிசியும், பார்லியமெண்ட் டெப்புடி ஸ்பீகருமான ஸ்ரீமான் எம். அனந்தசயனமய்யங்கார், ஸ்வாமியின் வித்வத்தன்மையைப் புகழ்ந்து தன் அஞ்சலியை வருமாறு சமர்ப்பித்தார்.

“தென்னிந்தியா பக்திக்குப் பிறப்பிடமாகும். அங்கிருந்து திக்விஜயம் செய்த பக்தி மார்க்க மாபெரும் ஆசாரியர்கள் ஸ்ரீராமானுஜரும் அவருக்குப்பிறகு வந்த மற்றவர்களும் தங்கள் பண்பு, கலை, ஆசாரம் இவைகளின் மூலம் உத்தரதேசத்தைத் தங்களாதீனம் செய்து கொண்டனர். இன்று ஆங்காங்கு க்ஷேத்திராடனம் செய்துகொண்டு அதே பண்பு ஒளியை நம் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் ஸ்வாமி பரப்பி வருகிறார். ஸ்வாமிகள் படாடோபமின்றி எளிமையாகத் தரிசனமளிக்கிறார்.

“ஸ்வாமியினிடத்தில் நம் பூர்வாசார்யர்களின் காம்பீர்யம் தேஜஸ்ஸு இவைகள் பூர்ணமாய் பிரகாசிக்கின்றன. இவரைப்பார்க்கும்போதெல்லாம் எனக்கு 900 வருடங்களுக்கு முன் அவதரித்த தனிப்பெருமை வாய்ந்த ஸ்ரீராமானுஜன் எப்படி சேவை சாதித்திருப்பார் என்பதை ஊகிக்கமுடிகிறது. நான் இதுவரையில் ஸமஸ்கிருதம் ஒரு சிறந்த பாஷை என்று மற்றவர்கள் சொல்லுவதில் உண்மையுண்டோவென்று சந்தேகித்ததுண்டு. ஆனால் இன்று நம் ஸ்வாமி ஸமஸ்கிருதத்தில் இவ்வளவு சுலபமாயும், தெளிவாயும், புஷ்டியுடனும் பேசினதைக் கேட்டபிறகு, ஸமஸ்கிருதத்தை இறந்த பாஷை என்று சொல்லுவதில் கொஞ்சங்கூட உண்மையில்லை என்பதையுணர்ந்தேன். “இறந்த பாஷையன்று, சிறந்தபாஷையே” என்ற உண்மையை உணர்ந்து கொண்டேன்.

“நம் தேசத்தின் புதிய அரசியல் சட்டத்தில் ஸமஸ்கிருதத்திற்கு ஒரு கௌரவ ஸ்தானம் அளிக்கப்பட்டிருக்கிறது. ராஷ்ட்ரபாஷை ஹிந்தியில், புதிய வார்த்தைகளை உண்டாக்க மூல வார்த்தைகளை ஸம்ஸ்கிருதத்திலிருந்துதான் எடுத்துக்கொள்ளவேண்டுமென்பது புதிய

அரசியல் சட்டத்தின் ஆக்ஞை. பார்க்கப்போனல் ஹிந்தியும் ஸம்ஸ்கிருதத்தின் ஒரு இரிந்த பாஷை என்றே சொல்லலாம். தேச சரித்திரத்தின் மீறுதல்கள் காரணமாக, மொகலாயர் காலத்தில் ஹிந்தியில் பல பாரசீக அரேபிய வார்த்தைகளும், சொல் தொடர்களும் வந்து புகுந்தன. ஆனல் இன்று ஸ்வதந்திர பாரதத்தில் ஹிந்திக்கும் ஸம்ஸ்கிருதத்திற்கும், மற்ற மாகாண பாஷைகளுக்கும் நடுவே நெருங்கிய தொடர்பு ஏற்படுத்தவேண்டும். இன்றைய ஸ்வதந்திர இந்தியாவில் நமது புராதன இந்திய பண்பு, கலை, ஆசாரம் இவைகளை மீண்டும் உயிர்ப்பிக்க பல சந்தர்ப்பங்கள் அளிக்கப்பட்டிருக்கின்றன. ஆனல் இந்த கைங்கரியத்தை ஸமஸ்கிருத ஞானம் அடைந்த பிறகே தான் செய்யமுடியும். ஏனென்றல் நமது நாட்டின் புராதன பண்பு, கலை இவைகளுக்கு ஸமஸ்கிருதந்தான் களஞ்சியம். ஸம்ஸ்கிருத ஸாஹித்தியத்திற்கு மனிதனை தர்ம பாதையில் நடக்க உத்ஸாஹமூட்டும் அபார சக்தி இருக்கிறது. எங்கள் இந்திய பண்புக் கழகத்தின் சார்பில் இலவசமாய் ஸ்மஸ்கிருதம் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். அதை யாவரும் பயன் படுத்திக்கொள்ளவேண்டுமென்பது எங்கள் பிரார்த்தனை.

"இன்று நம் ஸ்வாமிகள் ஸம்ஸ்கிருதத்தில் பேசினதை நாமெல்லாம் கேட்டோம். அவருடைய தமிழ் உபந்யாஸங்களைப் போலவே இதுவும் உணர்ச்சி ததும்பும் சொற்பொழிவாக இருந்ததைக் கண்டோம். உபயவேதாந்தங்களிலும், நம் பூர்வாசார்யர்களின் க்ரந்தங்களிலும் இவருக்கிருக்கும் ஞானம் அபாரம், ப்ரமிக்கத்தக்கது. ஸ்வாமி இன்னும் பல தடவைகள் உத்தர தேச யாத்திரையாக வந்து நம் ஆழ்வார் ஆசார்யர்களின் ஆதேசத்தை மீண்டும் மீண்டும் உபதேசிக்கவேண்டும். ஞானச் சுடரைக் கையிலேந்தி தேச முழுவதும் உண்மை அறிவைப் பரப்ப இம்மஹான் இன்னும் பல்லாண்டுகள் வாழவேண்டுமென இறைவனை பிரார்த்திப்போமாக." (கரகோஷம்.)

இவ்வண்ணம் ஸ்வாமியைப்பற்றி ஸ்ரீ அனந்தசயனமையங்கார் ஒரு தனிச் சிறப்பு வாய்ந்த புகழுரை நிகழ்த்திய பிறகு, கூட்டம் இனிது கலைந்தது.

---

புது டெல்லி, ஆகஸ்டு 7
(தொடர்ச்சி)

# 5. இராமாயணத்தினம்.

## கரோல்பாக்வாசிகள் ஸ்வாமிக்களித்த குதூஹல வரவேற்பு.

டெல்லியின் முக்கிய உபநகரான கரோல்பாக்கில், ஸ்ரீ. அண்ணங்கராசாரியாரின் ஐந்தாவதுநாள் ஷஷ்ட்யப்தபூர்த்திவிழா—இராமாயணத்தினம்—வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இரவு 9-மணிக்கு கூட்டம் 6/55 குருத்வாரா ரோட்டில் ஆரம்பித்தது. ஸ்வாமி எழுந்தருள்வதற்கு ஒருமணி முன்னிலிருந்தே ஆஸ்திகர்கள் விஜயம்செய்ய ஆரம்பித்தனர். உபநகரில் வசிக்கும் நம்பக்கத்தவர்கள் அநேகமாய் எல்லா ஆண்பெண்களும் கூட்டத்தில் பிரஸன்னமாயிருந்தார்கள். வெகு தூரத்திலிருக்கும் மற்ற காலனிகளிலிருந்தும் பலர் ஸ்வாமியின் பொன்மொழிகளைக்கேட்டு உஜ்ஜீவிப்போம் என்று, இரவின் நேரத்தையும் பாராமல் வந்திருந்தனர். கூட்டத்திற்கு ஸ்ரீ. எம். அனந்தசயனம் அய்யங்கார் தலைமைவகித்தார்.

ஸ்ரீமதி நாமகிரி ராஜகோபாலன் ஆழ்வார் பாசுரங்களிலிருந்து பல இனிய கீதங்கள் பாடினுர். பிறகு டாக்டர் வைத்தியநாத அய்யர் முதலியோர், பஜனசமாஜ், ஆஸ்திக சங்கம் இவைகளின் சார்பாக ஸ்வாமிக்கு மாலே மரியாதை செய்தனர்.

ஸ்ரீ அனந்தசயனமையங்கார் தமது தலைமையுரையில் ஸ்ரீ அண்ணங்கராசாரியரை தரிசனம் செய்ய ஆரம்பித்த நிமிஷத்திலிருந்தே எம்பெருமானுரை தரிசனம் செய்ததுபோல ஆனந்தபரவசம் அடைந்ததாகத் தமது அனுபவத்தைக் கூறி மேலும் சொன்னதாவது.

"முற்காலத்தில் ஜனங்கள் யாவரும் பகவானிடத்தில் நம்பிக்கையுள்ளவர்களாயிருந் தனர். ஆனுல் இன்றே காலம் மாறிவிட்டது. ஐரோப்பிய நாகரீகத்தைப் பலவிதத்திலும் பின்பற்றும் நாம் பெயருக்கு மாத்திரந்தான் ஹிந்துக்கள்; சித்தாந்தத்தைப்பற்றிய ஞானம் நமக்கு சூன்னியம். சாஸ்த்ரஞானத்தை அடைய முயற்சி எடுக்காமல் வீண் குதர்க் கம்செய்து பொழுதை வீணுக்குகிறேம். புத்தியும் அலேபாய்கிறது. ஆகையால் இவ்வளவு பேர்கள் ஸ்வாமியின் உபந்யாஸத்தைக் கேட்கக் குழுமியிருப்பது என் மனதிற்கு மிகுந்த ஆனந்தத்தை அளிக்கிறது.

"ஸ்வாமி அண்ணங்கராச்சாரியாரின் உபந்யாஸங்களைக் கேட்டனுபவித்த யாரும் அவைகள் கர்ணமிருதமாயும், மிருது மதுரமாயுமிருப்பதைக் கண்டுள்ளனர். இன்று ஸ்வாமி 'இராமாயணத்தில் சரணுகதி' என்ற விஷயத்தைப்பற்றி பேசப் போகிறுர். பகவானைத் தவிர வேறெருவனிடத்தில் தஞ்சம் புகாமலிருப்பது சரணுகதி. பகவான் ஒருவனையும் கைவிட மாட்டான். ஹிருதய பூர்வமாய் அவனைச் சரணமடந்தால் எக்காரியமும் சபலமாகும். இதை என் வாழ்க்கையில் பல சந்தர்ப்பங்களில் கண் கூடாகக் கண்டுள்ளேன்" என்று சொல்லி, ஸ்ரீ அனந்தசயனமையங்கார் ஒரு சமயத்தில் அஷ்டாக்ஷர மந்திரத்தைஜபித்து பாம்பு தீண்டின ஒரு பெண்ணின் உயிரைக்காப்பாற்றினதமது அனுபவமொன்றை எடுத்துரைத்தார் அடுத்தாற்போல் ஸ்ரீ மஹாவித்வான் ஸ்வாமியின் சொற்பொழிவு புனிதகங்கையின் பிரவாஹம் போல் அமைந்தது. அவர் 'சரணுகதி'யின் லக்ஷணங்களைப்பற்றி விவரித்து, இராமாயணத்தில் எத்தனை சரணுகதிகளிருக்கின்றன வென்பதை விரிவாகப்பேசி, பிறகு ஸ்ரீ ராமன் சமுத்திர ராஜனிடம் 'சரணம்' அடைந்தது உண்மையாக சரணுகதியா என்பதைப்பற்றியும் விசாரம் செய்து, இதுவரை எங்குங்கேட்டறியாத அரிய பெரிய பல விஷயங்களைப் பொழிந்தருளினுர்.

வந்தனேபசாரத்துடன் இரவு 11-30 மணிக்கு இன்றைய விழா முடிவடைந்தது.

---

புது டெல்லி, ஆகஸ்டு 8.

# ஷஷ்ட்யப்தபூர்த்தி விழாவின் சாற்றுமுறை

# 6. கீதா தினம்.

### கனம் உணவு மந்திரி ஸ்வாமிக்களித்த அஞ்சலி.

டெல்லியில் ஸ்வாமி அண்ணங்கராசாரியாரின் ஷஷ்ட்யப்தபூர்த்தி கடைசிதின விழா, 'கீதா தினம்' இன்று. இது கீதாபவன் மண்டபத்தில் இதற்கு முன்னறியாத உத்ஸாகத்து டன், கனம் உணவு மந்திரி ஸ்ரீ. கே. எம். முன்ஷியின் தலைமையில், சாயங்காலம் 6-30 மணிக்கு ஆரம்பமாயிற்று. சிறிது முன்னடியே வந்த ஸ்ரீ முன்ஷி ஸ்ரீ லக்ஷ்மீ நாராயணன்

கோயில் வாசலில் ஸ்வாமியை வரவேற்றார். இருவரும் பரஸ்பர குசலங்களைப்பற்றி விசாரித்தனர். கோயில் வேதபாடசாலைக்கு முன்புறத்திலுள்ள மேடையின்மேல் இருவரும் உட்கார்ந்து சிறிதுநேரம் பேசினார்கள். சென்றவருஷத்தில் காஞ்சீபுரத்தில் ஸ்ரீமுன்ஷியால் உத்காடனம் செய்யப்பட்ட வனமஹோத்ஸவத்தைப்பற்றின பேச்சு நிகழ்ந்தது. அச்சமயம் செய்தியாளர்கள் போட்டோ எடுத்தனர். [அதுவும் இதில் காணப்படும்] இதற்குள் அங்கு வரவேற்புக்கமிட்டித்தலைவர் டாக்டர் கிருஷ்ணன் இருவரையும் உபந்யாஸ மண்டபத்திற்கு மரியாதையாக அழைத்துச்சென்றார்.



P. B. A. ஸ்வாமியோடு K. M. முன்ஷியவர்களின் சம்பாஷணைப்படம்

கீதாமண்டபத்தில் ஆண்களும் பெண்களும், உத்தராதிகளும், தக்ஷிணாதிகளுமாய்க் குழுமியிருந்தனர். ஸ்வாமியும் ஸ்ரீ முன்ஷியும் மண்டபத்தில் நுழைந்ததும் ஜனங்கள் பலத்த கரகோஷம் செய்தனர்.

டாக்டர் கிருஷ்ணன் ஸ்ரீமுன்ஷிக்கு வரவேற்பளித்துப் பேசுகையில் சொன்னதாவது:

"கனம் முன்ஷி அவர்கள் பாரதத்தின் பண்பு, கலை இவைகளின் முன்னேற்றத்திற்காக மிக உற்சாஹத்துடன் பங்கெடுத்துக்கொண்டுவருவது யாவருமறிந்ததே. ஆகையால் அவர் நம் ஸ்வாமியின் ஷஷ்ட்யப்தபூர்த்தி கடைசிநாள் விழாவிற்கு வந்து கூட்டத்தை அலங்கரித்திருப்பது மிக உசிதமானதே. கனம் மந்திரியை இவ்விழாவிற்குத் தலைமை வகிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்." என்று டாக்டர் கிருஷ்ணன் கூறினார்.

ஸ்ரீமதி சரோஜா விஜயராகவன் இனிய பிரார்த்தனை கீதங்கள் பாடினார்.

அடுத்தபடியாக ஸ்ரீ முன்ஷி தனது தலைமையுரையை ஹிந்தியில் நிகழ்த்தினார். அவ்வமயம் அவர் கூறினதின் சுருக்கம்:

"ஸ்வாமிஜீ, சகோதர சகோதரிகளே: ஸ்வாமியின் ஷஷ்ட்யப்தபூர்த்தி விழாவில் பங்கெடுத்துக்கொள்ள இவ்வரிய சந்தர்ப்பமளித்த இவ்விழாநிர்வாஹிகளுக்கு முதலில் என் கிருதக்ஞதையைத் தெரிவித்துக்கொள்கிறேன். நான் ஒரு பெரிய வித்வானோ அல்லது சாஸ்த்ரஜ்ஞனோ அல்ல. ஆனால் ஸ்வாமி அண்ணங்கராசாரியரிடத்தில் எனக்கு உள்ளம் நிரம்பிய மரியாதையுண்டு. ஸ்வாமி எனக்குப் புதியவரன்று. மதராஸின் முதல் வனபஹோத்ஸவம் காஞ்சீபுரத்தில் நடந்தது உங்களுக்கெல்லாம் ஞாபகமிருக்கலாம். அச்சமயம் நான் அங்குச் சென்றிருந்தபோது ஸ்வாமியைச் சந்திக்கும் பாக்கியம் பெற்றிருந்தேன். ஸ்வாமியின்கீர்த்தியைப்பற்றியும் பாண்டித்யத்தைப்பற்றியும் அப்போது விசேஷமாகக் கேள்விப்பட்டேன். ஸ்வாமிமஹா வித்வான். ஞானச்சுடர். விசிஷ்டாத்வைத மதத்தில் சிறந்த தத்வஞானி ஆஸ்திக பிரசாரகர்களில் முக்யஸ்தர். நம் பூர்வபுருஷர்கள் போலவே வேதம் உபநிஷத்து, பகவத்கீதை போன்ற நம் சாஸ்திரங்களில் ததும்பி நிற்கும் உயர்ந்த லட்சியங்களை ஜனங்களிடையே புத்தகங்களாலும் பிரசங்கங்களாலும் பரப்பி, உஜ்ஜீவிக்கச் செய்து வருகிறார். இதையே தம் வாழ்க்கையின் முக்கிய லட்சியமாய்க் கொண்டுள்ளார். ஸ்வாமி முக்கியமாய் டெல்லிக்கு விஜயம்செய்து உபந்நியாஸங்களைச் செய்து வருவது மிகவும் போற்றத்தக்க விஷயம்; ஏனென்றால் டெல்லி மத்யசர்க்கார் இருப்பிடமாதலால் அரசியல், அரசாட்சி போன்ற விஷயங்களிலேயே நாம் மூழ்கிக்கிடக்கின்றோம். கடவுளைப்பற்றி ஒரு நிமிஷங்கூட நினைக்க சந்தர்ப்பம் வாய்ப்பதில்லை. தார்மிகவிஷயசாஸ்திரங்களைப்பற்றிக் கேட்கத் தருணம் கிட்டுவதில்லை. ஆகையால் ஸ்வாமி இங்கு நமக்கெல்லாம் செவிக்கும் ஹிருதயத்திற்கும் விருந்தளித்துவருவது உண்மையாக வரவேற்கத்தக்க விஷயம். ஸ்வாமி இப்படியே அடிக்கடி இங்கு விஜயம் செய்து தம்முடைய அழகிய உபந்யாஸங்கள் மூலம் நம்போல்வாருடைய கண்ணைத் திறந்து வைக்க வேண்டுமென்பது என் ஹிருதயபூர்வமான பிரார்த்தனை."

ஸ்ரீ முன்ஷி இவ்விதம் தன் அஞ்சலியை ஸ்வாமிக்களித்து மேலும் பகவத்கீதையின் பெருமையைப்பற்றி வருமாறு சொன்னார்.

"உலகத்தில் மிக பிரஸித்தமான தர்ம கிரந்தங்கள் நான்கு அல்லது ஐந்து உள. அவைகளில் பகவத் கீதை முக்கியமானது. பகவத் கீதையைவிட உயர்ந்த தர்ம சாஸ்திரம் உலகத்தில் ஒன்றுமில்லை என்பதே என் சொந்த அபிப்பிராயம். பகவத் கீதையில் நம் வாழ்க்கை சூத்தமும் அதை நேர்முறையில் சமாளிக்கும் வழியும் ஸாரமாக விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது.

"இன்றைய உலகத்தில் நம்மைச் சுற்றிப் பல பயங்கர அசுரத்தன்மைகள் தலைவிரித்தாடுவதைக் காண்கிறோம். இவைகளை அறவே ஒழித்து ஓட்டுவது அத்யாவசியம். அப்போது தான் உலகத்திற்கு க்ஷேமமுண்டாகும். பகவத் கீதையின் தத்துவங்களை ஜனங்கள் பின்பற்றினால்தான் இது சாத்தியமாகும். ஆகையால் கீதையின் பிரசாரத்திற்கு இன்று விசேஷமான அவசியம் ஏற்பட்டிருக்கிறது. ஸ்வாமியைப் போன்ற பெரியோர்களின் மூலம் தான் இது சாத்தியமாகும். இவ்வரிய சேவைக்காகக் கடவுள் நமது ஸ்வாமிக்கு நீண்ட ஆயுளை அருள்வாராக." இவ்விதம் ஸ்ரீ முன்ஷி கரகோஷத்தினிடையே சொல்லி முடித்தார்.

பிறகு முன்ஷி விருந்தாவனம் ஸ்ரீரங்கஜீ கோயிலிலிருந்து ஸ்ரீ ஸ்வாமி ஸ்ரீனிவாஸாசார்ஜி மஹராஜ் அவர்கள் கொண்டு வந்திருந்த புஷ்பமாலை, சால்வை இவைகளை ஸ்வாமிக்குச் சாத்தி மரியாதை செய்தார். அந்த சந்தர்ப்பத்திலெடுத்த படமும் இதில் காணலாகும்.

காஞ்சீபுரம் P. B. A. ஸ்வாமிக்கு புது டெல்லியில் 3—8—51 தேதியிலிருந்து 8—8—51 தேதி வரை நடந்த ஷஷ்டியப்தபூர்த்தி விழாக்கொண்டாட்டத்தின் முடிவுநாளில் கனம் முன்ஷி அவர்களால் ஸ்வாமிக்குப் பரிசளிக்கும் காட்சி.



# புதுடில்லி ரேடியோ ஆபீசில் 8-8-51.



P. B. A. ஸ்வாமியினுடையவும் அவருடன் வந்த அத்யாபகவேதபாராயண ஸ்வாமிகளினுடையவும் பல வாக்குக்களை ஸங்கிரகித்த சந்தர்ப்பத்தின் காட்சி.

---

ஸ்வாமியிடம் தங்களுடைய பிரதிபத்தியைக் காண்பிக்கும் ரீதியில் டெல்லி மஹாஜனங்கள் சார்பில் டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் ஸ்வாமிக்கு ஒரு பணமுடிப்பு அளித்தார்.

அடுத்தாற்போல் மதராஸ் P. B. A. S. P. கமிட்டியின் காரியதரிசியான ஸ்ரீ. C. ராதா கிருஷ்ணய்யா அவர்கள் காஞ்சியிலும் சென்னையிலும் ஸ்வாமிக்கு நடந்த ஷஷ்டியப்த பூர்த்தி வைபவ விஷயமாகச் சில வார்த்தை கூறி, மேலும் குறிப்பிட்டதாவது.—

"இன்று டெல்லியில் ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி விழா முடிவடைகிறது. இச்சமயம் உங்கள் காரியதரிசி ஸ்ரீ ராகவனைப்பற்றி கொஞ்சம் சொல்லவிரும்புகிறேன். ஸ்ரீ ராகவன் சுமார் ஒரு வருடத்திற்கு முன் மதராஸில் தொண்டைமண்டலம் ஸ்கூலில் நடக்கும் ஸ்வாமியின் உபந்யாஸத்திற்கு வந்திருந்தார். அப்போது ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்திக்கு ஏற்பாடு செய்யவேண்டியதின் அவசியத்தைப்பற்றி வற்புறுத்தினர். இவர் உத்ஸாகமூட்டினதிற்குப் பிறகுதான் எங்கள் கண் விழித்தது. எங்கள் கடமையை அறிந்தோம். உடனே விழாவிற்கான ஏற்பாடுகளை, சென்னை ஹைகோர்ட் ஜட்ஜு ஸ்ரீ கிருஷ்ணசாமி நாயுடு அவர்களை தலைவராகக் கொண்ட ஒரு கமிட்டி மூலம் செய்ய ஆரம்பித்தோம். ஸ்ரீ ராகவன் மதராஸிலுள்ள எங்களை உத்ஸாக மூட்டினதுடன் நிற்காமல், டெல்லியிலும் இவ்விழா

விற்கு முயற்சி எடுத்துக் கொண்டு இவ்வளவு அற்புதமாகச் செய்து முடித்தது பாராட்டத் தக்க விஷயம்.'' (கரகோஷம்)

அடுத்தபடியாக ஸ்ரீ அண்ணங்கராசாரியார் ஸ்வாமி, ஸ்ரீ முன்ஷியின் விருப்பத்திற் கிணங்கி முதலில் ஸம்ஸ்கிருதத்திலும், பிறகு தமிழிலும் "கீதையின் உபதேசம்'' என்ற விஷயத்தைப்பற்றிப்பேசினது வாசாமகோசரமாய் இருந்தது என்பதுதவிர வேறு யாம் என்ன எழுதக்கூடும்? பிறகு டெல்லி மஹா ஜனங்கள் தமக்கு இவ்வளவு குதூகலமாய் வரவேற் பளித்ததற்காகத் தமது கிருதக்ஞதையையும் மிக வினிய சொற்களால் ஸ்வாமி ஜீ தெரிவித்துக்கொண்டார்.

"கீதோபன்யாஸம் முடிந்தவுடன், ஸ்ரீமான் எஸ். அனந்தாசாரியார், கமிட்டியின் சார்பாக தன்னால் எழுதப்பட்ட வடமொழி ஸ்வாகதப்பத்திரிகையிலுள்ள "ஸ்ரீமாகண்ணங்க ரார்யோ ஜகதி விஜயதாமக்ரயாயீ குரூணும்'' என்ற மங்களாசாஸன ச்லோகத்தின் பொருளை வெகு அழகாக எடுத்துச்கூறினர். செவிக்கின்பத்தை யூட்டுகின்ற "காதாமாத்வீமுபாஸே'' என்ற பத்யத்தின் பொருளை ஸபையோர் வியக்கத்தக்க முறையில் உரைத்து, திவ்யப்பிரபந்த திவ்யார்த்ததீபிகை முதலியவற்றால் நம் ஸ்வாமி உலகுக்குச் செய்திருக்கும் பேருபகாரத்தைப் புகழ்ந்தார். பிறகு "அண்ணங்கரார்யகுரவ: ப்ரதிவாதிபயங்கரா:, ஜேஜீயந்தாம் ஜகத்யஸ்மிந் யாவச்சந்த்ரதிவாகரம்'' என்ற பிரார்த்தநாபத்யத்தை ஸ்ரீஸ்வாமியின் திருவடிகளில் ஸமர்ப்பித் தது எல்லோரும் கொண்டாடத்தக்க காட்சியாயிருந்தது.

ஸ்ரீ S. R. S. ராகவன் அவர்கள் ஸ்வாமிக்கும், இவ்விழாவின் வெற்றிக்குக் காரண பூதரான கமிட்டி அங்கத்தினர்களுக்கும், அதி உத்ஸாகத்துடன் உதவிய டெல்லி ஸநாதன தர்ம சபைக்கும், மற்றும் விழாவில் பங்கெடுத்துக்கொண்ட யாவருக்கும் வந்தனோபசாரம் கூற, மங்களகானத்துடன் விழா இனிது முடிந்தது.

"டெல்லியில் எந்த கோடீச்வரனுக்கும் எந்த மஹா வித்வானுக்கும் இவ்வளவு அத்புத மாய், உத்ஸாகத்துடன் ஷஷ்டியப்த பூர்த்தி இதுவரையில் கொண்டாடப்படவில்லை. இனி யும் தான் இப்படி நடக்குமோ?'' என்றே யாவரும் கூறுவது, ராமராவணயுத்தம், ஸமுத்திரம், ஆகாசம் இவைகளுக்கு ஸமானம் இவைகளே. அதே போன்று நம் ஸ்வாமி அண்ணங்கரா சாரியாரின் ஷஷ்டியப்த பூர்த்தி விழாவிற்கு ஸமானம் அதுவே.

ஸம்ஸாரிகள் உஜ்ஜீவிக்க, கருணைக் கடலான எம்பெருமான், நம் இராமானுசனுக்க ளித்ததுபோல, ஸ்வாமி அண்ணங்கராசாரியாருக்கும் இரண்டாவது ஷஷ்டியப்த பூர்த்தி விழா கொண்டாட பல்லாண்டு பல்லாண்டாக நீண்ட வாழ்நாளை அளிக்கவேண்டுமென்று பிரார்த்திப்போமாக. ... .... .... ... ....

முற்றிற்று.



# அநுபந்தம் — லெட்டர்கள்.

புது டில்லியில் இந்த விழாக் கொண்டாட்டம் நடந்தகாலத்துப் பலபல பெரியார்கள் வடமொழியிலும் தென்மொழியிலும் ஹிந்தியிலும் ஆங்கிலத்திலும் எழுதியனுப்பிய வியாஸங்களும் கடிதங்களும் அபரிமிதமாகக் கிடைத்தன. அவற்றையெல்லாம் அச்சிட்டு வெளியிட வேண்டியது அவசியமாயினும் சில கடிதங்களே இங்கு வெளியிடப்படுகின்றன.

சென்னைமாநகரில் விளங்கும் ஸ்ரீமான் உ. வே. ஆழ்வார்திருநகரி

## இராமகிருஷ்ணய்யங்காரவர்களின் ஸ்ரீமுகம்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

34, பெத்துநாய்க்கன் தெரு. மதராஸ்—1.
20—7—51.

**ஸ்ரீ. அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஷஷ்ட்யப்தபூர்த்தி விழாக்கமிட்டிக் கார்யதர்சி அவர்களுக்கு;**

பேரன்புடையீர்!

தங்களது 13—7—51 தேதி கடிதம் கிடைக்கப்பெற்றேன். பெருமகிழ்வுற்றேன். லௌகிகவழியில் முன்னேறிய நீங்கள் வைதிகவழியிலும் விழியைச் செலுத்துவது கழிபேருவகை தருகிறது. எம்போன்றோரை ஊக்கமுறச்செய்கிறது. ஏன்? இந்நாட்டையே ஆக்கமுறச் செய்கிறது எனினும் மிகையாகாது.

பலவகைகளிலும் நம் தமிழகத்தவர் சகத்தவர் மதிப்பைப் பெற்றிருக்கின்றனர்; அதற்கு நீங்களே தக்கசான்று. உலகியல் அரசியல்களிற்போல மத இயலிலும் நம் தமிழகத்துக்குத் தனிமதிப்புண்டு. கோவர்த்தனம் ரங்காசார்யர்ஸ்வாமியும், காதி அநந்தாசார்யர் ஸ்வாமியும் வடநாடெங்கும் நம்வைஷ்ணவத்தை வளனுறச்செய்திருக்கிறார்கள். அவர்களால் முறையே பிருந்தாவனத்திலும், பம்பாய் நகரிலும் நம்தமிழகப் பண்பாடு தலைநிமிர்ந்து துலங்குவதை இன்று நாம் காண்கிறோம்.

அத்தகைய காதி அநந்தாசாரியர் மரபிலே பிறந்து அன்னாரிடம் கல்வி கற்றுச் சிறந்து விளங்குபவர், இன்று நம்மால் கௌரவிக்கப்பெறும் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி. வடகலையும் தென்கலையும் பயின்றநாவர்; அவரது பெருமைக்கு ஏற்ப அறுபதாம் ஆண்டு விழாவை நீங்கள் கொண்டாடுவது வரவேற்கத்தக்கதே. இதனால் வடநாட்டில் இன்னும் வைணவம் வேரூன்றும் என நம்புகிறேன்.

நான் குறிப்பிடும் வைணவத்தை விசாலநோக்குடன் கவனிக்கவேண்டும். வைணவத்துக்கு எந்த மதத்தோடும் முரண்பாடில்லை. வைணவம் என்பது மனத்தூய்மையே. குழம்பிக்கிடக்கும் இன்றைய உலகம், தெளிந்து நல்வழியில் முன்னேறுவதற்கு வைணவம் இன்றி வேறு துணை கிடையாது. விஞ்ஞான முறையிலேற்படும் முன்னேற்றங்கள்

தெளிவுக்கு வழிகாட்டவில்லை. மாறாக மனக்கலக்கமும் யுத்தபீதியுமே அதன்பயனாக அதிகரித்திருக்கின்றன. இந்நிலையில் எய்தற்கரிய மறைப் பொருளை இன்தமிழில் அருளிய ஆழ்வார்களின் உபதேசத்தை உலகெங்கும் பரப்பினால் உண்மையான அமைதி நிலவும். ஆக்ரமிப்புமனப்பான்மை அடியோடு ஒழியும்; பஞ்சம் பறந்துபோம். உலகமே ஒரு குடும்பம்போலாகும். வேற்றுமைக்கு வைணவத்திலிடமில்லை. உலக சர்க்கார் அமைக்க வேண்டும் என்று வாயால் அளக்கிறவர்கள் வைணவ ப்ரசாரம் செய்ய முன் வரட்டும். அஃதின்றி அவர்கள் உருவான பலனைக் காணமுடியாது. வைஷ்ணவிஸத்தைத்தவிர எந்த இஸமும் உலகிற்கு இசையாது; நிலையாது.

நம்நாடு சம்பந்தப்பட்ட மட்டிலுமாவது நாம் உண்மையான வைணவத்தை ப்ரசாரம் செய்யக் கங்கணம் கட்டிக்கொள்ளல்வேண்டும். நம் நாடு இதுகாறும் பெருமை எய்தியிருந்தது மதத்தின் பெயரால் ஏற்பட்ட ஒழுக்கத்தாலேயே. மதம் என்ற அடிப்படையின்றி ஒழுக்கத்தை நிலை நிறுத்தமுடியாது. ஒழுக்கத்தை இன்று நம் நாடு ஓம்பவில்லை; விழுப்பத்தையிழக்கிறது. மீண்டும் நம் நாட்டிலே வைணவத்தை எளிதில் பரப்பமுடியும். பரவினால் பகை பசி தீயன எல்லாம் இல்லாது ஒழியும். ஐயமில்லை. அநுபவத்திலே கண்ட உண்மையிது. ஸ்வாமி நம்மாழ்வார் அருளிய பொய்யில் பாடலைப் பாருங்கள்:

> "கொன்றுயிருண்ணும் விசாதி பகை பசி தீயனவெல்லாம்
> நின்றிவ்வுலகிற்கடிவான் நேமிப்பிரான் தமர் போந்தார்."

ஆழ்வார் அருளியபடி உடனடியாக உணவு நெருக்கடியைத் தீர்க்கும்வழியும் வைணவ ப்ரசாரமே. இக்கமிட்டி இவ்விழாவைக் கொண்டாடுவதோடு நின்று விடாமல் நிரந்தரமாய் நின்று உலகிற்கு நல்வழி காட்டுமா? காட்டவேண்டும் என்பது என் அவா; வேண்டுகோளுங்கூட.

தற்காலத்திலே—மதமே புறக்கணிக்கப்படும் இந்நாளிலே, பல ப்ரமுகர்களான நீங்கள் தைரியமாக முன் வந்து மனமுவந்து ஸாம்ராஜ்யத்தின் தலைநகரிலே நம் மத ஆசிரியரைக் கௌரவிப்பதை நான் பாராட்டாமலிருக்கமுடியவில்லை.

வைணவர்களை இவ்வுலகம் கௌரவிப்பதில்லை, மேலும் இகழுகிறது என்று குறைபட்டுக் கூறுகிறார் நம்பிள்ளை ஈட்டிலே. அவரது மனோநிலையைப் பிரதிபலிப்பிக்கும் திவ்ய ஸூக்தியைப் பாருங்கள் "இங்கே வைஷ்ணவர்கள் என்றதுவே ஹேதுவாகப் பங்கு(உரிமை) பெறாதே திரியுண்ட வைஷ்ணவர்களை அங்குள்ளார் (மேல் உலகில் உள்ளார்) எதிர் கொண்டு இருப்பிடங்கள் கொடுக்கப் படுகிறபடி" என்பது அது. நம்பிள்ளையினது நெஞ்சில் இருந்த குறைபாட்டை இன்று நீங்கள் நீக்கிவிட்டீர்கள். அதற்காக என் மனமார்ந்த நன்றி உங்களுக்கு உரித்தாகிறது.

இக்கமிட்டியே இவ்வாசிரியரது எண்பதாம் ஆண்டு நிறைவிலும் இருந்து இதையும் விடப் பெரும்விழா நடத்தி நம்மை மகிழ்விக்கும் என்று நம்புகிறேன். அங்ஙனமே செல்வத்திருமால் திருவருள் சுரப்பானாக!

வாழ்க வைணவம்! வீழ்க நாஸ்திகம்! வாழ்க பாரதம்!

**T. RAMAKRISHNA IYENGAR,**
34, Peddunaick St., MADRAS-1.

o

ஸ்ரீ
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

T. K. இராமாநுஜையங்கார்,
செந்தமிழாசிரியர்.

மதுரைத்தமிழ்ச்சங்கம்,
மதுரை, 31—7—51.

ம-ா-ா-ஸ்ரீ S. R. S. இராகவாசாரியரவர்களுக்கு,

அன்பும் அறிவும் ஆற்றலும் பெருந்தகவும் உடையீர்!

தங்களால் 11—7—51ல் அனுப்பப்பட்ட ஸ்ரீ. உப. வே. மஹா வித்வான் P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் ஷஷ்ட்யப்தபூர்த்தி விழா அழைப்பும் அவ்விழா நிகழ்ச்சிக்குறிப்பும் வந்தன. நன்றிபாராட்டுகிறேன்.

டில்லிமாநகரில் நடக்கும் அவ்விழாநிகழ்ச்சியிற் கலந்துகொள்ளும் விழைவு மிகவுடையேன். ஆயினும் இங்குள்ளகார்யமிகுதியால் விழைந்தபடி அங்குவந்து கலந்துகொள்ள முடியாமல் வருந்துகிறேன். க்ஷமித்தருளவேண்டுகிறேன். உங்கள் முயற்சி இனிது முடியுமென்று நம்புகிறேன்.

ஸ்ரீ. உ. வே. P. B. A. ஸ்வாமி ஆழ்வார்களும் ஆசார்யர்களுமாகிய முன்னோர் ஆற்றிவந்த அரும்பெரும் பணிகளையெல்லாம் தாம் ஒருவராகவேநின்று நன்காற்றிவருகிறார்; பத்திரிகை வெளியீடுகளாலும் க்ரந்த நிர்மாணத்தாலும் ஸத்க்ரந்தப்பிரசுரங்களாலும் வ்யாகயானங்கள் வரைவதாலும் உபந்யாஸத்தாலும் ஒய்வொழிவில்லாது பிற நல்ல கைங்கர்யங்களைப் புரிவதாலும் ஒப்பாரை மிக்காரையில்லாத பெருந்தகையாளராக விளங்குகிறார். அவருடைய இடையறவுபடாத நன்முயற்சியால் தான் எம்பெருமானார் தெரிசனம் இக்காலத்துத் தன் பெருமையோடு விளங்குகிறதென்றால் அது மிகையாகாது.

விசிஷ்டாத்வைத சித்தாந்த ப்ரவசனத்துக்கென்றே பூருவாசாரியர்களனைவரும் இக்காலத்தில் ஒருருவமும் ஒரு திருநாமமும்பெற்று அவதரித்தார்கள் என்று சொல்லும்படி மிளிரும் நம் P. B. A. ஸ்வாமியை எவ்வளவு போற்றினாலும் தகும். அவரை நாம் போற்றுவது பகவானையும் ஆழ்வார்களையும் ஆசாரியர்களையும் போற்றுவதாக முடியுமேயன்றி வேறில்லை. அவர், மேலும் நாம் நூற்றாண்டுவிழாவும் கண்டு போற்றும்படி நோயற்றவாழ்வும் குறைவற்ற செல்வமும் பெற்று, தெரிசனப்ரவர்த்தகராய் வாழ்ந்து இந்த லீலாவிபூதியை நித்யவிபூதியாக்கியருளத் தேவாதிராஜன் திருவருள்புரிக.

இங்ஙனம் உாவாநு

T. K. இராமாநுஜன்,

31—7—'51,

கும்பகோணம்
1–8–'51

டெல்லி மாநகரிலமர்ந்து வாழும் ஸ்ரீமான்களான, ஸ்ரீ. உ. வே மஹாவித்வான் காஞ்சீபுரம் பிரதிவாதி பயங்கர, அண்ணங்கராசாரியஸ்வாமி ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவக் கொண்டாட்டக் கமிட்டியாருக்கு, திருக்குடந்தை, இளையவில்லி தி. ஸ்ரீநிவாஸாசாரியின்

## அன்பார்ந்த விண்ணப்பம்.

அவ்விடத்து அன்பு ததும்பிய அழகிய அழைப்பு லெட்டர் சேர்ந்தது. அதே ஸமயம் இவ்விடம் ஸ்ரீஆராவமுதாழ்வானுக்குத் திருப்பவித்திர உத்ஸவமானதால் நேரில் வந்துகலந்து கொள்ளக் கூடவில்லை.

அடியேன் கச்சிப்பதியில், "முதுநான்மறை வீதிதொறும் அலையாருங்கடல் போல் முழங்கின" ஸ்ரீ ஸ்வாமியின் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவத்திலும், "மன்னுதண் பொழிலும் வாவியும் மதிளும் மாடமாளிகையும் மண்டபமும்; தென்னன் தொண்டையர்கோன் செய்தநன்மயிலை" என்கிற சிறப்பைப் பெற்ற சென்னைமாநகரில், "பரதனும் தம்பி சத்துருக்கனனு மிலக்குமனோடு மைதிலியு மிரவு நன் பகலும் துதி செய்ய நின்ற" என்கிறபடியே, அவ்வவ மேன்மை தங்கியவனைவரும் ஆர்வம் பெருகிக் குனித்தவப்பொழுதும், அக்குழுவினுள்ளும் இனிது கலந்திருந்து கூடியாடி விழாச்செய்த வொருவனானதால், ஆழ்வாராசாரியர்களருளிச்செயல்களின் ஆழ்ந்த கருத்தை அழகாக அநுபவித்து அனைத்துலகுமறிய வெளியிட்டு வருகிற நம் ஸ்வாமிக்கு எங்கு நடக்கும் கொண்டாட்டத்திலும் நேரில் கலந்து அநுபவிக்க இயலாவிடினும் தக்க காரணங்களின் வழியே ஒப்புயர்வற்ற வழியில் அநுபவிக்க, "யானே தவம் செய்தேனேழ்பிறப்பு மெப்பொழுதும்" என்கிறபடியே இறுமாந்திருப்பேன்.

ஆகிலும், "எண்டிசையும் பேர்த்த கர நான் குடையான் பேரோதித் தீர்த்தகராமின் திரிந்து" என்கிற திவ்ய ஸூக்தியைத் திருத்தக் கொண்டு, தீர்த்தவடியவர்களுடன் எழுந்தருளுகிற ஸ்ரீ ஸ்வாமியின், திவ்யதேச, திவ்ய தீர்த்தாடன யாத்திரையில், "எம்பெருமானார் கோஷ்டியையும், மணவாளமாமுனிகளின் கோஷ்டியையும் அக்காலத்தில் கண்டுகளிக்கப் பெறமுடியாத வடியேனுக்கு, டெல்லியில் இப்பால் அந்த பாக்கியங் கிடைக்கப்பெற்றதென முன்னொருகால் ஸ்ரீராமாநுஜன் பத்திரிகையில், ஸ்ரீமான், எஸ். ஆர். எஸ். ராகவன் அவர்கள் வெளியிட்டிருந்த படிக்கும் அதிகமாகவே, தற்போது காணக்கிடைக்கப் போகிற, "வண்டார் தண்ணந்துழாயான் மாதவன் பூதங்கள் மண்மேல், பண்தான் பாடி நின்றாடிப் பரந்து திரிகின்றனவே" என்கிறபடிக்குள்ள அடியார்களின் குழாங்களைக் கண்டு "கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம் தொண்டீரெல்லீரும் வாரீர் தொழுது தொழுது நின்றார்த்தும்" என்று அநுபவித்தும், "உலகிலேய்ந்த பெருஞ்செல்வத்தராய்த் திருமாலடியார்களைப் பூசிக்க நோற்றார்களே" என்கிற நம்மாழ்வார் திவ்ய ஸூக்தியை அடிக்கடி புத்தியிலிருட்டு முத்தமர்களான உங்களுடைய பாகவதாராதனப் பெருமையைப் பார்த்தும் பரமானந்தமடையவும் முடியாத குறை குறையே. இனியானென் செய்கேன்.

யமுனைத்துறைவனுன எம்பெருமான் பல படியிலும் "ஒரு காலில் சங்கொருகாலில் சக்கரமுள்ளடி பொறித்தமைந்த, இருகாலுங்கொண்டங்கங் கெழுதினுற்போ லிலச்சினை பட" "தூயபெருநீர்யமுனைத்துறை" கொண்ட தேசங்களெங்கும் நடந்தபடியில் இந்நகரும் அந்த பாக்கியம் பெற்றும்; அடியரர்கள் வஸிப்பதற்குப் பாங்காக விளங்கி நிற்கு மாதலாலும், இம்மண்டலத்தில் அடியேனையும் ஒருகால விசேஷத்தில் அடியார்களுடன் ஒருமண்டல காலம் இருத்தி அபிமானித்துப் போந்தபடியாலும், இப்பால் அடியார்கள் கொண்டாட விருக்கும் இக்கொண்டாட்டத்திலும் அடியேனுக்கும் ஒரு கூறு உண்டென்பதில் ஐயமொன்றில்லை.

பின்னும் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீஸ்வாமியும் எங்குச் சென்று, எம்பெருமான்களையும், அவனடியார்களையும் பணிந்தேத்தும் பொழுதெல்லாம், "அடியேனுக்கும் போற்றுமினே" என்கிற அடியேனுடைய பிரார்த்தனையை அங்கீகரித்துள்ள வொருவரேயானதால் அவ்வநுபவ பரீவாஹ பலன்களிலும் முற்கூறு அடியேனுடைய தென்பதில் ஆக்ஷேபணையே இல்லை.

ஆனதால் ஸ்ரீஸ்வாமியினிடம், டெல்லி மஹா ஸபையாருடன் ஒன்றுபட்டு வாழும் அடியேனுடைய அனந்த ப்ரணாமங்களையும் தக்க ஸமயத்தில் விண்ணப்பிக்கவேணும்.

கர ஆடிப்புனர்வஸு, கர்ணக்கொல்லை அக்கிரஹாரம், திருக்குடந்தை. — இளையவில்லி, தி. ஸ்ரீநிவாஸ தாஸன்.

---

ஸ்ரீ:

மதுரை ஸ்ரீ. உ. வே. மநீஷிமாந்ய

## ராவ்பஹதூர் நரஸிம்ஹய்யங்கார் ஸ்வாமியின் ஸ்ரீமுகம்

ஐயன்மீர்,

பகவான் ஸ்ரீமந்நாராயணன் பக்தர்கள்கூடி, சேர்ந்து, நித்யானந்தத்தைத் தன்னுடன் கலந்து அநுபவிப்பதற்காகவே ஸ்ரீ வைகுண்டத்தை ஸ்ருஷ்டித்திருக்கிறார். ஆகஸ்டு 3 முதல் 8 வரை விழா கொண்டாட கூடும் மகாஜனசங்கம், ஸ்ரீ வைகுண்டம் மணிமாமண்டபத்திலிருக்கும் சபைக்குத்தான் ஒப்புவாசி அமைக்கலாம்.

அடியேனுக்கு வயது 74. "அன்பு சேவை" என்பதைக் கைக்கொண்டு காலம் கள்ளுகிறேன். எனது பூரா நம்பிக்கை யாதெனில், மதம் இப்பூலோக வாழ்க்கையை ஒவ்வொருவருக்கும் சமூகத்துக்கும் மங்களகரமாக நடத்த அதிகாரமுள்ளது; சக்திவாய்ந்தது.

"அந்தர்யாமித்வம்," இதில் அடியேனுக்கு ஈடுபாடு அதிகம். உண்மையில், ஸர்வேச்வான் பரிசுத்தமான ஹ்ருதயங்களில் ஆண்பெண் எதிலும் நன்றாய் வாசம் செய்துகொண்டு ஜோதிஸ்மயமாய் பிரகாசிக்கிறான்.

அந்த "மஹாபுருஷன்" ஸ்வாமி மஹாவித்வான் ஸ்ரீ. உ. வே. P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் ஹ்ருதயத்தில் விசேஷித்து வசிக்கிறான். அவ்விதம் யான் அறிகிறேன். ஸ்ரீ ஸ்வாமிகளின் ஸ்ரீ ஸூக்திகள், மஹா வ்யாக்யானங்கள் காலக்ஷேபங்கள் இவைகள்

மூலமாக அறிகிறேன். அடியேனுடைய மனம் சிந்தனையில் ஸ்ரீமத் ஆசார்ய ஸ்வாமியை ஸ்ரீ வரதராஜன் என்றே உறுதியாயிருக்கிறேன். இந்தியாவினுடைய பாரதகண்டத்தின் புண்யக்ஷேத்ர ஈச்வரதத்துவத்தைக் காப்பாற்றுவது ஆசார்யபக்தி ஒன்றுலேயே.

புதுடெல்லியிலுள்ள மகாபுருஷாள் ஷஷ்டி அப்தபூர்த்திவிழா கொண்டாடுவதால், அந்தர்யாமித்துவத்தின் மேன்மையையும் மகிமையையும் உலகத்துக்கு ரூபாகாரமாக வெளிக் காட்டுகிறுர்கள்.

மஹாபுருஷனைய் மநுஷ்யரூபமாகக் காணப்படுகிற ஒவ்வொருவரையும் அடிபணிந்து உய்வது கடமை என்பதையும் ஸ்தாபிக்கிறுர்கள்.

குருபக்தி, ஆசார்ய பக்தி, தலைவருக்கு வணக்கம், பூலோகத்தில் மிதக்கயிருக்க வேணும்.

தங்கள் விழாவின் பல விஷயாதிகளும் நன்கு நடைபெற அதாவது பகவத்பாகவத ஆராதனங்கள் நன்கு நடக்கக் கோருகிறேன். இது ஒரு அபூர்வவிசேஷ சம்பவமான தால் சரித்திரத்தில் காண நன்கு நடைபெறப் பிரார்த்திக்கிறேன்.

விதேயன்,
R. நரஸிம்மய்யங்கார், மதுரை

---

ஸ்ரீஉதெ ராஜா நுஜாய நம:

புது டெல்லி,
21-8-51.

ஸ்ரீமத் S. R. S. ராகவன், நெ. 5, ஓல்டுமில் ரோட், புது டெல்லி
அவர்களது திருத்தாயார்

## ஜானகியம்மாளெழுதுவது,

ஸ்ரீமத். உ. வே. மஹாவித்வான், பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் தலை வணங்கிக் கைகூப்பி அனந்தமான தெண்டன் ஸமர்ப்பித்துச் செய்யும் விண்ணப்பம்.

தேவரீருக்கு விண்ணப்பம் எழுதலாமென்று பேனவைக் கையில் எடுக்கும்போதே கை நடுங்குகிறது, நெஞ்சு பட பட வென்று துடிக்கின்றது. ஏனென்றுல் கல்வி யென் பதைக் கனவிலும் நினையாத பேதை நான். தேவரீருடைய மகிமையோ அபாரம். தேவரீர் மஹா வித்வான்; ஆத்ம ஜ்ஞானி. அத்தகைய தேவரீருடைய மகிமையையும் கல்வித் திறத்தை யும் சொல்ல நினைத்தது மதியின்மையால் பயிலும் கவிகளில் பத்தியில்லாத வென்பாவி நெஞ் சால் அவன் தன் பெருங்கீர்த்தி மொழிந்திட முயன்றது போலல்லவா ஆகிறது. முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவதுபோலவும், ஒரு மசகமானது மகா மேரு பர்வதத்தைப் பந்துபோல வெடுத்து ஆடமுயல்வதுபோலவுமல்லவா ஆகின்றது.

அனேக வித்வான்களும் பக்திமான்களும் பிரபுக்களும் குவியல் குவியலாய் எழுத்தால் புகழாகிற மலர் மாரியைச் சொரிந்து விட்டிருக்கிறுர்கள். புலியைப் பார்த்துப் பூனை சூடு

போட்டுக் கொண்டால் பூனை புலியாகுமா? நரி வாலைக் கொண்டு கடலாழம் பார்ப்பது போலல்லவா ஆகிறது என் முயற்சி?

ஆனாலும் ஆசை என்பது பெரிதா? கடல் பெரிதா? என்று பார்த்தால் ஆசைதான் பெரிதென்று திடமாய்ச் சொல்லலாம். ஆழ்வாரும் *காதல் கடலில் மிகப் பெரிதால்* என்றும், *கொண்டவென் காதலுரைக்கில் தோழீ! மண்டிணி ஞாலமும் ஏழ் கடலும் நீள் விசும்பும் கழியப் பெரிதால்* என்றும் அருளிச் செய்துள்ளார். தவிரவும் பகவான் இட்ட கட்டளைப்படி அவதரித்துள்ள அவதார புருஷர்களான பெரியார்களின் கல்வித்திறத்தைப் புகழ்வது நமது கடமையேயாகும்.

ஸ்வாமியின் பெருமையை ஆதிசேஷனாலும் உரைக்க வொண்ணாதென்றால் அடியேன் சிற்றறிவுமில்லாதாள் எப்படி உரைக்கமுடியும்? ஆனாலும் ஆசை மிகுதியால், பெரியோர்களைக் கண்டால் அவர் தம் பெருமையைப் பேசவேண்டுமென்று தூண்டுகிற நெஞ்சுக்கும், அந் நெஞ்சைத் தந்த பகவானுக்கும் தெண்டன் ஸமர்ப்பித்து எழுதத் தொடங்குகிறேன்.

கல்விச் செல்வமே உயர்ந்த செல்வம். இதைக் கள்வன் களவாடான். ஏழு மதிளுக்குள் பெரிய பெருமாள் வசிப்பதுபோல நம் இதயமாகிற மதிளுக்குள் கல்விச் செல்வம் வளர்ந்தோங்கி வாழ்கின்றது. இது யாரும் களவாடாத தனமேயாகும்.

இந்த பரத கண்டத்தில் இத்தகைய வித்வான் வேறு இல்லை என்று திடமாய்ச் சொல்லலாம். கல்வி கற்றுவிட்டாலும்; அதைப் பரவச் செய்வதும், அரிய பெரியசபையில் ஒன்றைச் சொல்வதும் முடியாதவை. அப்படிச் சொன்னாலும் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர்களுக்குத் தான் செவிப்படும். உபன்னியாசத்துக்குப் போகாத பேர்வழி உபன்னியாசம் எப்படியிருந்தது? எதைப் பற்றியது? என்று கேட்டால் "நான் தூரத்தில் உட்கார்ந்திருந்தேன். ஒன்றுமே காதில் படவில்லை" என்ற பதில்தான் வரும். இவர்களுக்குக் கட்டாயம் லவுட்ஸ்பீகர் வைத்தேயாகவேண்டும். ஸ்வாமி கண்டமோ வென்றால் *மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும், சீரிய சிங்கம் அறிவுற்றுத்தீவிழித்து......மூரி நிமிர்ந்து முழங்கிறற் போலல்லவா இருக்கிறது!

நிற்க, உலகில் கலியுகக் கொடுமையால் நிகழும் அட்டூழியங்கள் கணக்கில் அகப்படா. ஸ்நான ஸந்த்யாவந்தனாதிகள் முற்றும் மறைந்தன. தாய் தகப்பன் ச்ராத்தாதிகளையும் நினைப்பாரில்லை. பெரியோர்கள் நடத்தின அநுஷ்டானங்களை அடியோடு மறந்துவிட்டார்கள். ஜாதி பேதமின்றி உண்பதே உயர்வாக ஆய்விட்டது. மாதம் மும்மாரி பெய்து உலகம் செழித்தல் நீங்கி வருடம்மும்மாரி கூடப்பெய்யாமல் க்ஷீணதசை உண்டாகிவிட்டது. ரூபாய்க்குப் பத்துப் படி அரிசி விற்றதுபோக, ரூபாய்க்கு ஒரு படி அரிசி கூட விற்கவில்லை. தேவர்களுக்கும் பிதிர்க்களுக்கும் ஹவிஸ் அகப்படவில்லை. *பொறியில்வாழ் நரகமெல்லாம் புல்லெழுந் தொழியுமன்றே* என்ற வாக்கியம் மாறி நரகமெல்லாம் ஊசி நாட்டவும் இடமில்லாமல் பாபாத்மாக்கள் நிறைந்துவிட்டன. ஸம்ஸாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து, ஸம்ஸார மாகிற பெருங்கடலில் விழுந்து நோவுபட்டு இறகொடிந்த பக்ஷிகளைப்போல் தவிக்கலானார்கள்.

" தன்புதல்வன் கூடாமல் தான் புசிக்கும் போகத்தால்
இன்புறுமோ தந்தை "

என்னுமாபோலே கருணாமூர்த்தியான ஸர்வேசுவரன் இவர்களைக் கண்டு ஸகிக்கமாட்டாமல் பக்தர், நித்யர், முக்தர் ஆழ்வார் ஆசார்யர்களைக் கூட்டி ஒரு சபை நாட்டினான். அந்த சபை

யின் முடிவாக, எம்பெருமான் எம்பெருமானரை நோக்கி "ஓய் ராமாநுசரே; நீர் நித்திய விபூதியில் நம்முடன் கூடி அனுபவித்ததுபோதும்; லீலா விபூதியில் கலி புருஷன் செய்யும் அக்ரமங்கள் சொல்ல முடியாதவையாயின. நரகமெல்லாம் நிரம்பிவிட்டதாம். வேறு நரகம் உண்டாக்குவதற்கு நரக அதிகாரிகள் யோசித்துக் கொண்டிருக்கிறார்களாம். முன்னொரு காலத்தில் லீலா விபூதியில் போய் நாஸ்திகர்களைத் திருத்தி ஆஸ்திகர்களாகச் செய்து உலகம் உஜ்ஜீவிக்கும்படி செய்தீர். அதுபோலவே இப்போதும் திருத்திப் பணிகொள்ளும்" என்று ஆக்ஞாபித்தருளினான். அவரும் "நாயிந்தே நாயிந்தே!" என்று பகவானுக்கும் பக்தர்களுக்கும் கை கூப்பித் தெண்டன் ஸமர்ப்பித்து விடைபெற்றுக் கொண்டு குதூகலத்துடன் "பெருந்தேவித் தாயாரையும் பேரருளாளப் பெருமாளையும் திரும்பவும் ஸேவிக்கப் பெற்றோம்" என்னும் களிப்புமேலீட்டால் பிரதிவாதி பயங்கரருடைய நன்மாபில் அண்ணங்கராசார்ய ஸ்வாமியாகத் திருவவதரித்தார்.

ஸ்வாமியின் வித்வத்து அடியேனுடைய அறிவுக்கு எட்டாதது. தவிரவும் ஸ்வாமியின் மகிமை உலகறிந்த பெருமை. விச்வாமித்ர மஹாரிஷி *கௌஸல்யா ஸுப்ரஜா ராம!* என்று முதலில் தாயாரைத் துதித்ததுபோல், இவரைப் பெற்ற வயிறுடையாளை என்ன நோன்பு நோற்றாள் கொலோ வென்றே கொண்டாடவேணும்.

இப்பரத கண்டத்திற்கே திலகம் போல் விளங்குகின்ற ஸ்வாமியின் மகிமை பொங்கிப் பெருக்கெடுத்து நான்கு திக்குகளிலும் கரைபுரண்டு வழிந்தோடுகின்றது. அதைப் பருகி சமஸ்த ஜனங்களும் உஜ்ஜீவிக்கின்றனர். இப்படிப்பட்ட மஹான்கள் உலகில் அவதரித்து அடிக்கடி போதித்து வந்தால் 'அடிமேல் அடி வைத்தால் அம்மியும் நகரும்' என்றபடி கடின நெஞ்சும் பகவத் பக்தி கொண்டு கரையும்.

உலகில் மானிட ஜன்மமெடுத்தால் சர்வ காலமும் எம்பெருமானைத் துதித்தல் வேண்டும்.

தாயானைத் தூய மறையானைத்—தென்னலி
மேயானை மேவா ளுயிருண் டமுதுண்ட
வாயானை—மாலை வணங்கி அவன் பெருமை
பேசாதார் பேச்சென்றும் பேச்சல்லகேட்டாமே.

இத்தன்மை ஸ்வாமிக்கே தகும். உலக விஷயமான பேச்சே ஸ்வாமியிடம் கனவிலும் இல்லையென்று திடமாய்ச் சொல்லலாம். *வாய்க்கொள் வாசகமும் மணிவண்ணன் நாமமே யிவர்க்கு. உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ணனாகவே ஆடியாடி அகங்கரைந்து, இசைபாடிப் பாடிக் கண்ணீர் மல்கி ஸர்வ காலமும் குணானுபவங்களிலேயே போது போக்குகையும், ஆழ்வாராசார்யர்களின் ஸ்ரீ ஸூக்திகளுக்கு வ்யாக்யானம் செய்கையும், ஸ்ரீ ராமாநுசனுக்கு அமுதம் போன்ற விஷயங்களைத் திரட்டி யெடுக்கையும் ஆகியவைகளே இப்பெரியார்க்குப் பணி. இங்ஙனம் பகவத் பாகவத கைங்கர்யங்களில் ஈடுபட்ட பெரியார்க்கு இனிவேறென்னவேண்டும்?

ஊன் வாட உண்ணா துயிர் காவலிட்டு உடலில் பிரியாப் புலனைந்தும் நொந்து தாம் வாட வாடத் தவஞ்செய்யவேண்டா. இப்படிப்பட்ட ஞானிக்கு யாகம், யக்ஞம், தபஸ் ஒன்றுமே வேண்டாம்.

பக்திக்கு அடிப்படை சாந்தம்; கோபமே இல்லாமை. சாந்தம் சோற்கைக் காட்டிலும் முக்கியமானது. "சாந்தமு லேக சௌக்யமு லேது" என்பது தியாக ராஜ ஸ்வாமிகள் வாக்கு. ஸ்வாமிக்கு கோபமோ அசூயையோ கிடையவே கிடையாது. அப்படி கோபமும் அசூயையும் இருக்குமானுல் மஹாதேசிகரைப் பற்றிப் புகழமாட்டார். அவருடைய க்ரந்தங்களை அழகாக அச்சியற்றியும் வ்யாக்யானித்தும் இருக்கமாட்டார். வடகலையார் கூட தேசிக க்ரந்தங்களை இவ்வளவு அச்சிடவில்லை.

ஆழ்வார் ஆசார்யர்கள் அமுதினும் இனிய வாக்குக்களை நமக்கு உஜ்ஜீவனார்த்தமாகச் செய்தருளினார்கள். அவைகளைப் பலரும் உதாசீனித்து, உண்டியே உடையே உகந்தோடித் திரிந்தார்கள். அதன் பயனுக ஆஸ்திக தர்மம் அழிந்து நாஸ்திகம் மேலோங்கி வருவதை அறிந்த ஸர்வேச்வரன் ஸஹிக்கமாட்டாமல் நம்மிராமாநுசனை உலகைத்திருத்திப் பணிகொள்ளும்படி ஆஜ்ஞாபிக்க அவரும் அண்ணங்கராசார்யராய்த் தோன்றி சமஸ்த ஜனங்களுக்கும் உபதேசகராய் அமைந்தருளினார்.

ஸ்வாமி பல்லாண்டு பல்லாண்டாய் எழுந்தருளியிருந்து சென்ற அறுபதும்போக [உடையவராதலால்] பாக்கி அறுபதும் ஆரோக்கியத்துடன் எழுந்தருளியிருந்து அனைவர்க்கும் நல்வழியைப்போதித்து உஜ்ஜீவிப்பிக்குமாறு செய்யவேண்டி ஸர்வேச்வரனைப் ப்ரார்த்திக்கிறேன்.

இதில் அநேக தவறுகள் நிரம்பிக்கிடக்கும். குழந்தையின் மழலைச் சொற்களை கேட்ட தாய் தகப்பன்மார் மகிழ்வதுபோல அனைவரும் மகிழவேணுமாய்ப் ப்ரார்த்திக்கிறேன். சிறுவர்கள் மண்ணில் வீடிழைத்து விளையாடும் விளையாட்டைக்கண்ட சிற்பியானவன் தான் நிர்மாணம் செய்வதுபோல இல்லையென்று பரிஹஸிக்கமாட்டான். சிறுவர் செய்கையைக் கண்டு மகிழ்வதுபோல என் செய்கைக்கும் யாவரும் மகிழ வேண்டுகிறேன். பல வித்வான்களும் ப்ரபுக்களும் ஸ்வாமிக்குப்புகழுரைகளை அனுப்பியிருக்கிறார்கள். அவ்வாறு எழுதியனுப்பிய பலருக்கும் த்ருஷ்டிதோஷம் நேராமலிருக்குமாறு இக்கடிதம் எழுதத்துணிந்தேன்.

இப்படிக்கு, அடியார்க்கு அடியாள்,

**S. R. S. ராகவன் தாயார், ஜானகி.**

---

முக்கியமான குறிப்பு:—இப்படி மற்றும்பல கடிதங்கள் பல பாஷைகளிலும் வந்திருந்தாலும் விரிவுக்கு அஞ்சி நிறுத்திக்கொண்டோம். டில்லி விழாக்கொண்டாட்ட ஸமயத்தில் நடந்தசெய்திகள் விசேஷங்கள் யாவும் அப்போதுபெரும்பாலும் எல்லாப்பத்திரிகைகளிலும் சுருக்கமாகவும் விரிவாகவும் வெளிவந்தன. சென்னை ஹிண்டு பத்திரிகையில் முடிவாக வெளிவந்த வியாஸமொன்றை மாத்திரம் மொழிபெயர்ப்புடனுங்கூட இங்கு வெளியிட்டு இப்புத்தகம் முடிக்கப்படுகிறது.



# TRIBUTES TO VIDWAN ANNANGARACHARYA

(THE "HINDU" dated 10—8—51)

NEW DELHI. Aug. 8

The six-day celebration to mark the Shashtiabdapoorthi of Vidwan P. B. Annangaracharya Swami of Kancheepuram concluded this evening when, at a largely attended public meeting in Gita Bhawan, tributes were paid to the missionary zeal with which the Swami has been expounding Indian philosophy. A purse was presented to him by the citizens of Delhi as a token of their reverence and admiration.

Mr. K. M. Munshi, Minister for Food and Agriculture, presided. Dr. K. S. Krishnan, Chairman of the Organising Committee, welcomed the guests at the meeting which commenced with invocation by Srimathi Saroja Vijayaraghavan. Mr. Munshi spoke in highly appreciative terms of the scholarship of Sri Annangaracharya.

Later, Vidwan Annangaracharya delivered a lecture, partly in Sanskrit and partly in Tamil, his subject being the Essence of the Gita.

Mr. S. R. S. Raghavan, Secretary of the Committee, proposed a vote of thanks.

Mr. M. Anantasayanam Iyengar, Deputy Speaker of Parliament speaking at a reception given by the Cultural Association last evening to Sri Annangaracharya, said that with the advent of freedom, they now had ample opportunity of re-discovering the real culture of India and getting back to the study of Sanskrit, the store-house of inspiration and knowledge.

The Swami spoke at length in Sanskrit on "South India's contribution to Sanskrit literature", quoting slokas to explain the unique contribution to Sanskrit literature of Sri Alavandar, Sri Ramanuja, Vedanta Desika and others.

Dr. Surendranath Sastri, Professer of Sanskrit, Hindu College, who presided, pointed out that the contribution of South India to Sanskrit literature lay embedded in the religious works of the great Acharyas.

Sri Venkatarama Ghanapatigal of Madura, who welcomed the Swami, said he was one of the greatest living scholars of Sanskrit and it was a treat to hear him speak in Sanskrit.

Mr. AnanthasayanamIyengar said that the South gave birth to the Bhakti cult and Acharyas like the great Ramanuja made Digvijayas to the north

and conquered it not by force of arms, but by culture. To-day they had a glimpse of that personality in Sri Annangaracharya Swami who had brought with him that culture. In him they saw simplicity combined with dignity and the spiritual effulgence of the great acharyas of old. In free India they had ample opportunity of re-conquering the real culture of India. He referred to the small beginnings made by the Cultural Association to impart Sanskrit knowledge to others and appealed to learn the language in large numbers.

After paying tribute to the Swami as a powerful orator not only in Tamil and Telugu but also in Sanskrit and Hindu and as a great soholar widely read in the works of the Acharyas Mr. Iyengar prayed that the Swami might be spared to them for many more years of useful work.

---

10—8—51-ல் ஹிண்டு பத்ரிகை வெளியிட்ட இதற்கு—மொழி பெயர்ப்பு.

## டெல்லியில் வித்வான் அண்ணங்கராசாரியர் ஸ்வாமிக்கு.

அளிக்கப்பட்ட

## புகழுரைகள்.

காஞ்சீபுரம் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகளுடைய ஷஷ்டியப்த பூர்த்தி சம்பந்தமான ஆறு நாளைய கொண்டாட்டம் இன்றைய சாயங்காலத்தோடு இனிது முடிவடைந்தது. அப்போது "கீதா பவனத்தில் நடந்த மாபெருங்கூட்டத்துக்கு ஏராளமான ஜனங்கள் வந்து குழுமியிருந்தனர். ஸ்வாமிகளுடைய பிரசார ஆர்வத்தின் காரணமாக அவர் ஹிந்துமதத்துக்குச் செய்துவரும் தொண்டைப் பாராட்டி வெகுவாகப் பேசப்பட்டது.

இந்திய உணவு மந்திரி கனம். K. M. முன்ஷி தலைமை வகித்தார். வரவேற்புக் கமிட்டித் தலைவர் டாக்டர் K. S. கிருஷ்ணன் அவர்கள் விருந்தினர்களை வரவேற்றார். ஸ்ரீமதி ஸரோஜா விஜயராகவன் அவர்களால் பாடப்பட்ட பிரார்த்தனை கீதத்துடன் ஆரம்பிக்கப் பட்டது. கனம் K. M. முன்ஷி ஸ்வாமியினுடைய அபார பாண்டித்யத்தைக் குறித்து வெகு வாகப் பாராட்டிப் பேசினார். இறுதியில் வித்வான் அண்ணங்கராசார்ய ஸ்வாமி 'கீதையின் ஸாராம்சம்' எனும் விஷயமாகப் பாதி ஸம்ஸ்கிருதத்திலும் பாதி தமிழிலும உபந்யசித்தார். கமிட்டி காரியதரிசி ஸ்ரீ. S. R. S. ராகவன் அவர்கள் வந்தனோபசாரம் கூறினார்.

ஸ்ரீ. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளுக்கு நேற்றைய மாலை (7—8—51) டில்லி கலைச் சங்கத்தார் கொடுத்த வரவேற்புவைபவத்தில் தலைமை வகித்த டெபுடி ஸ்பீகர் M. அனந்த சயனம் அய்யங்கார் பேசியபோது இந்தியா சுதந்திரமடைந்துள்ளதால் இந்தியாவின் உண் மையான கலாசாரங்களைப் புனருத்தாரணம் செய்யவும், உத்வேகத்தையும் அறிவையும் இருப் பிடமாகக் கொண்ட ஸம்ஸ்க்ருத பாஷா ஞான அபிவிருத்தி செய்வதற்கும் அனேக வாய்ப்பு

கள் ஏற்பட்டுள்ளனவென்று கூறினர். பின்னர் ஸ்வாமி விஸ்தாரமாக ஸம்ஸ்க்ருதத்தில் பேசினர். ஸம்ஸ்க்ருத உலகுக்குத் தென்னிந்தியா செய்துள்ள தொண்டுகளை ஸ்ரீ ஆளவந்தார், ஸ்ரீராமானுஜர், ஸ்ரீ வேதாந்ததேசிகர் முதலானவர்களுடைய ஸ்ரீஸூக்திகளை மேற்கோள் கூறி அழகாகப்பேசினர்.

ஹிந்து கலாசாலே ஸம்ஸ்கிருத போதகாசிரியர் டாக்டர் சுரேந்திரநாத் சாஸ்திரியவர்கள் தலைமை வகித்து ஸம்ஸ்க்ருதத்துக்குத் தென்னிந்தியா செய்துள்ள தொண்டுகள் யாவும் மகாசார்யர்கள் அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகளில் புதைந்து கிடக்கின்றனவென்று பேசினர். மதுரை ஸ்ரீ. வெங்கடராம கனபாடிகள் ஸ்வாமியை வரவேற்று தற்காலத்திலுள்ள ஸம்ஸ்க்ருத விற்பன்னர்களில் ஸ்வாமி ஒருவரென்றும் ஸ்வாமி ஸம்ஸ்கிருதத்தில் பேசக்கேட்பதே பெரிய ஆனந்தமென்றும் கூறினர்.

பின்னர் ஸ்ரீ. M. அனந்தசயனமையங்கார் பேசியதாவது :—பக்தி விருக்ஷத்துக்குத் தென்னிந்தியா விதை போட்டது. ஸ்வாமி ஸ்ரீராமானுஜரைப் போன்ற ஆசார்யர்கள் வடக்கே திக்விஜயம் செய்து வெற்றி கண்டது அவர்களது உயர்ந்த கலைப் பண்பினுல்தான்; அவர்களது பலத்தினுலல்ல. அந்த ஸ்ரீராமானுஜருடைய சாயை இன்று ஸ்ரீ அண்ணங்கராசாரியரிடம் பிரதிபலிக்கிறது. இவர் அந்த உயர்ந்த பண்பைக் கொண்டிருக்கிறுர். இவரிடம் பெருந்தன்மை கலந்த சௌலப்யமும் பூர்விக ஆசார்யர்களுடைய ஆத்மிக சக்தியும் பொலிந்து காண்கிறது. சுதந்திர இந்தியாவில் இந்தியாவின் புராதனகலைகளைப் புனருத்தாரணம் செய்வதற்குவேண்டிய வசதிகளும் வாய்ப்புகளும் இருக்கின்றன. கலைக்கழகம் யாவர்க்கும் ஸம்ஸ்கிருத பாஷா ஞானம் பரவச்செய்யச் செய்துள்ள சிறிய ஆரம்பங்களைக் கொண்டு எல்லாரும் ஆயிரக்கணக்கில் இந்த பாஷையைக் கற்பதில் இருக்கும் வசதிகளை நழுவவிடக்கூடாது" என்று.

பின்னர் சுவாமியினுடைய தமிழ்-தெலுங்கு மாத்திரமல்ல மற்றும் ஸம்ஸ்கிருதம், ஹிந்தி முதலிய பாஷைகளிலுள்ள வாக்கு வன்மையையும் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளில் அவர்க்குள்ள அபார ஞானத்தையும் புகழ்ந்துபேசி ஸ்வாமி இன்னும் அநேக வருஷங்கள் இத்தகைய உபயோகமான திருப்பணிகள் செய்யும்படி அருளவேண்டுமெனக் கூறிமுடித்தார்."

டெல்லியில் ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமியின்
**ஷஷ்டியப்தபூர்த்தி விழாக்கொண்டாட்டவைபவம்.**
முற்றிற்று.

